| [ஆசிரியர் திருநாமங்கள்-க.] | [நூலின் திருநாமங்கள்-க] |
|---|---|
| திருவள்ளுவர் | திருக்குறள் |
| நாயனார் | முப்பானூல் |
| தேவர் | உத்தரவேதம் |
| முதற்பாவலர் | தெய்வநூல் |
| தெய்வப்புலவர் | திருவள்ளுவர் |
| நான்முகனார் | பொய்யாமொழி |
| மாதானுபங்கி | வாயுறைவாழ்த்து |
| செந்நாப்போதார் | தமிழ்மறை |
| பெருநாவலர் | பொதுமறை |



உ

சிவமயம்.

# திருவள்ளுவநாயனார் சரித்திரம்.

---

உலகத்துள் மஹா சிறப்புப் பொருந்தி
விளங்கும் திருக்கைலாயத்திலே உயர்வொ
ப்பில்லாத செம்பொற் றிருக்கோயிலிலே
நவரத்தினங்களால செய்யப்பட்டு, சூரிய
னது பிரகாசத்துக்கும் மேம்பட்டு விளங்கு
ம் திவ்விய சிங்காதனத்திலே, பிரமாதி
முப்பத்துமுக்கோடி தேவர்கள், நாற்பத்
தெண்ணாயிர முனிவர்கள், கின்னரர், கிம்
புருடர், கருடர், காந்தருவர், சித்தர், வித்தி
யாதரர் முதலானவர்கள் இருபுடைசூழ்
ந்து வணங்கித் தோத்திரித்து நிற்கவும்,
சிவகாமங்களின் பேரொலி எங்கும் தழை
த்தோங்கவும், தமது அருட்சத்தியும் உலக
மாதாவுமாகிய உமாதேவியார் இடப்பாகத்
தில் வீற்றிருக்கவும் அளவிறந்த பெருங்
கருணையோடு பரமசிவம் திருவோலக்க
மாக எழுந்தருளியிருந்தார். அப்பொழுது

உமாதேவியானவள் எழுந்து வணங்கி நின்று சுவாமீ! திரிலோகங்களிலே இல்லறம் வழுவாது நடந்துகதியடைந்தவருணடோ? என்று மிகுந்த கருணையோடு வினவ, பரமேஸ்வரர் அருளிச்செய்கின்றார்:—

உமையவளே! தெய்வலோகத்தில் வசிஷ்டர், அகஸ்தியா, அயன், புயங்கன், சம்பு என்று ஐந்துபேருண்டு. பூலோகத்தில் திருவள்ளுவனென் றொருவருண்டு. இவர்கள தென்புலத்தார்கடன், தேவர்கடன், விருந்தோம்பல், சுற்றந்தழுவல், கபிலைபூசைசெய்தல் முதலிய இல்லறத்தில் கற்பின்வழுவாத நற்குண நற்செய்கையுள்ள மனைவியரோடிருந்து, இல்லறக்கடன் நடத்தி மோக்ஷமடைந்தாரென்று, திருவாய் மலர்ந்தருளப் பார்வதியார் "சுவாமீ! பூலோகத்திலே திருவள்ளுவர் என்பவர் யார? அவர்சரித்திரம் கேட்க விரும்புகின்றேன்" என்றுகேட்க, சிவபெருமான் சொல்லுகின்றார்:—பூர்வத்திலே ஒரு பிரளயம்வந்தது. அதுவருமென்று, பிரம்மா முன்னமேதெரிந்து அதிலே இறவாதுபிழைக்கும்படி வேற்றுருவடைந்து ஒரு சுரைக்கூட்டைத் தனக்கிடமாகக்கொண்டு அதிற்புகுந்து அவ்வெள்ளத்தின்மேல் மிதந்துவந்தார். அதுகண்டு,

நாம் அறியாதவர்போல் இதற்குள்ளிருப்பவன் ஆரொன்றுகேட்டோம். தான் வருங்காலமறிந்து செய்தற்கேற்ப வள்ளுவ ரொன்றுரார். இப்பிரளயத்தில் நீர் எப்படிப் பிழைத்திருந்தீரெனக் கேட்டோம். அப்போது பிரமன் நம்மைப்பரமேஸ்வரர்என்று தெரிந்துகொண்டு மிகுந்த பேரானந்தத்தையடைந்து,''பரமசிவமே! உமது திருவருளினால்பிழைத்திருந்தேன்; ஆயினும், தேவரீர் அடியேனமீது கிருபைகூர்ந்து இந்தப்பிரளயத்தைநீக்கியருளவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, நாம் அந்தஅதிகாரம் உமக்கே கொடுத்தோம் என்று அவராலே முன்புபோல் உலகத்தைச் செய்வித்தோம்; அத்தன்மையுடைய அவர் பூமியிலேபிறந்தகாரணமுஞ் சொல்லுகின்றோம்.

ஆதிகாலத்தில் பூமியிலே பாண்டிநாட்டில் மதுரைமாநகரத்திலிருந்த சங்கப்புலவர்கள் நம்மை ஓர்கால் அவமதிப்புச் செய்ததின்பொருட்டு அவர்கள் கர்வபங்கமாகும்படிப் பிரமஸ்வரூபராகிய திருவள்ளுவரையும், மஹாவிஷ்ணுவையும், சரஸ்வதியையும் பூமியில் அவதரிக்கும்படி அனுப்பினோம். அவருள் மஹாவிஷ்ணு இடைக்காட

ராய்ப்பிறந்தார். சரஸ்வதியும் திருவள்ளுவ ரும் வந்தமரபுங்கேட்பாயாக.

ஆதியிலே பிரம்மபுத்திரர்களாகிய காசி பர்முதலிய நவப்பிரமாக்களில் நாகிபர்ஷனர் வசிஷயைச்சேர்ந்து வசிஷ்டரைப் பெற்றார். அவர் அருந்ததியைச்சேர்ந்து சத்தியரைப் பெற்றார். அவர் புங்கனூர்ப் புலைச்சியைச் சேர்ந்து புராசரைப்பெற்றார். அவர் மச்ச கந்தியைச்சேர்ந்து வியாசரைப் பெற்றார். இவர்கள் நால்வரும் வேதங்களுக் குரியவ ரானார்கள்.

பின்பு பிரம்மாவானவர் இன்னுஞ் சில புத்திரரால் வடமொழியையுந் தென்மொ ழியையும் விளங்கச்செய்யவேண்டுமென்று எண்ணி, வேதவிதிப்படி ஒருயாகஞ்செய்ய, அதன்கண் வைத்திருந்த கும்பத்தினின் றும் கலைமகள் அவதரித்தனள். அவளைப்பிரமன் விவாகஞ்செய்துகொண்டார். பின்பு அகஸ் தியர் குறியவடிவோடு அக்கும்பத்துதித்த னர். அவர் சமுத்திரக்கன்னிகையை மண ந்து பெருஞ்சாகரனென்பவரைப்பெற்றார். அவர் திருவாரூர்ப் புலைச்சியைச் சேர்ந்து பகவனென்பவரைப் பெற்று, அவர்க்குச் சகலசாஸ்திரங்களையுங் கற்பித்தார். அந்நா ளில் பிரம்மவம்சத்தில் தவமுனி என்பவர்

அருண்மங்கை என்னும் பிராமணமாதைச் சேர்ந்து ஒரு புத்திரியைப் பெற்றுவைத்து விராலிமலையில் தவஞ்செய்யச் சென்றனர். அக்குழந்தையை உறையூர்ப் பெரும்பறையன் கண்டெடுத்துச் சிலகாலம் வளர்த்துவருகையில் மேல் நடக்கப்போகிற காரணத்தினால் இந்தப்பெண்தவிர மற்றவர்கள் யாவரும் இறக்கும்படி அந்தச் சேரியில் எக்காரணமுமின்றி மண்மாரி பெய்தது. பின்பு அந்தப்பெண் அதற்கடுத்த மேலூர் அகரத்திலே நீதியையன்வீட்டில் வளர்ந்திருந்தனள்.

அப்போது பகவனென்பவர் சகலசாஸ்திர பண்டிதராய்க் கண்டவர் யாவரும் மரியாதை பண்ணும்படிப்பிராமண கிர்த்தியத்தில் வழுவாதவராயிருக்கையில் யாத்திரை பண்ணும்படி இச்சைகொண்டு, காசிக்குப் போம்போது இவ்வகரத்துக்கடுத்த ஒரு சத்திரத்திலிறங்கி நித்தியகருமானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு சமையல்செய்து கொண்டிருந்தார். அவ்விடத்தில் அந்தப் பெண்வர அவளைக்கண்டு நீயார்? புலைச்சியோ! வலைச்சியோ! இங்கேவந்தாயென்று அதட்டி மிகுந்த கோபங்கொண்டு சட்டுவத்தால் அவளது தலையிலே உதிரஞ்சோர

அடித்தோட்டினார். அவள்அழுதுகொண்டு தன்னிடத்துக்குப்போய்விட்டாள்.

மறுபடியும் பகவனென்பவர் ஸ்நானஞ் செய்து போசனம்பண்ணி அதிசீக்கிரத்தில் வழிகொண்டு சிலநாளிற் காசிக்குப்போய்க் கங்காஸ்நாநஞ்செய்து பிரயாகையிலிருந்து தீர்த்தக்காவடி கட்டிக்கொண்டு வரும்போது, முன்தங்கியிருந்த சத்திரத்தில் வந்திறங்கினார். மேற்சொல்லிய பெண்ணானவள் அப்போது மஹா லட்சுமியைப்போலும் அழகும், யவ்வர்ன்னபருவமும், உடையவளாய் அங்கேவந்தாள். பகவனென்பவர் இவளுடைய சௌந்தரியமுதலிய குணங்களைப்பார்த்துமோகங் கொண்டார். அச்சத்திரத்துக்கு அதிபராகிய நீதியையனென்பவர் அக்குறிப்பினைக்கண்டு, என்பெண்ணை நீர் விவாகம்பண்ணிக்கொண்டு இங்கேயேயிருமென்றுசொல்ல, அதற்கு அவர் நான் கொண்டுவந்தகாவடியைஇராமேச்சுரத்திற் செலுத்திவந்து அப்படியே செய்கிறேனென்று உறுதிமொழிகூறி, அவரிடத்திற் செலவுபெற்றுக்கொண்டுபோய், இராமலிங்கத்துக்கு அபிஷேகம்பண்ணித் திரும்பிவந்தார். அப்போது நீதியையர் விவாகம் எத்தனம்பண்ணிப் பந்துமித்திரர்களோடிருந்

து விசேஷமாய் நாலுநாளைய சடங்குகளும் செய்து, ஐந்தாநாள் மங்களஸ்நானஞ் செய்விக்கும்போது பகவனென்பவர் அந்தப் பெண்ணினுடையதலையில் எண்ணெயைப்பெய்யும்படி மயிரைவகிர்ந்தார். அப்போது தான் முன்பு சட்டுவத்தாலடித்த வடுவைக்கண்டு அனுமானித்து இந்தப்பெண் யார்? என்று வினவி அதன் வரலாற்றையும் விசாரித்து, விசனங்கொண்டு, நீ ஆதியளல்லவா ! வென்று சொல்லிவிட்டு ஓடினார். அதுவே அவளுக்கு ஆதிஎன்னும் காரணப் பெயராயிற்று.

அபபடி ஓடிய பகவனென்பவர் பொழுதுபோகையில் எதிரேகண்ட பாணர்சேரியில் இருந்த ஒருமண்டபத்திலே தங்கினார். ஆதியென்பவளும் அவர் பின்னே தொடர்ந்து அவரைக்கண்டு வணங்கிநின்று, என் அன்பிற்கினிய பர்த்தாவே! தெய்வச் செயலால். உமக்கும் எனக்கும், இந்தக்காரியம் நடந்திருக்கச்சகலமீதியும்அறிந்த நீரென்னை விட்டுப்போகுதல் உமக்குத்தகுமோ? அல்லது தருமமோ ? அரைக்கணம் உம்மைநீங்கி நான் உயிர்வாழ்ந்திருப்பனோ? வென்று, மிகவும் இரக்கத்துடன் சொல்லப் பிராரத்துவகர்மவசத்தால் இவர் புத்தியினும், அது

சரியென்றுபட்டுப்“பெண்ணே ! என்னிடத்தில்உனக்கு உண்மையான அன்பு இருக்குமானால் யான்சொன்னபடிகேட்கவேண்டும்.அஃதென்னெனில், “உனக்குப் பிள்ளைகள்எங்கெங்கே பிறக்கிறதோ ! அங்கங்கே அவைகளை அப்பொழுதேவிட்டுவருவையானால்நான் உன்னைக்கூடச் சம்மதிப்பேன்” என்றுசொல்ல, அவள் அதற்கு உடன்பட்டபடியால்,அன்றிரவில் அம்மண்டபத்தில் இருவருங் கூடினார்கள்.

அப்போது நம்முடைய உத்திரவின்படி சரஸ்வதியாரவராலும் புகழப்பட்டஔவையாகப் பிறந்தாள். இந்தக்குழந்தையையாவர் காப்பாற்றுவார் என்றுவிட்டுநீங்கத்தாய் வருந்தும்போது அது சொல்லியது.

### ஔவை.

இட்டமுட னென்றலையி லின்னபடி யென்றெழுதி
விட்ட சிவனுஞ்செத்து விட்டானோ—முட்டமுட்டப்
பஞ்சமே யானாலும் பாரமவ னுக்கன்றோ
நெஞ்சமே யஞ்சாதே நீ.

அதுகேட்டு மனந்துணிந்து போயினள்; பின்பு அக்குழந்தையை அச்சேரியிலுள்ள பாணர்களெடுத்து வளர்க்க,வளர்ந்து சரஸ்வதி ஆகையால் இயல்பாகவே கலைமுழுவது மதித்து, “சீதக்களப” வென்னுங்

கணபதி அகவல்பாடி அவரை உபாசித்து, உலோகோபகாரமாக "ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி, குறள், அசதிக்கோவை, நன்னூற்கோவை, நான்மணிக்கோவை, பந்தனந்தாதி, அருந்தமிழ்மாலே, தரிசனப்பத்து" முதலியவுஞ்செய்து ஒவ்வொரு காரியத்தின்பொருட்டுத்தனிக் கவிதைகள் அநேகம்பாடி, அநேக அற்புதங்களெல்லாஞ் செய்து முடித்தவருநாளில் ஒருநாள் கணபதி பூசை விரைவாகச் செய்தாள். அவர் வழக்கப்படியன்றி, விரைந்து செய்வது ஏனென்றுகேட்க, சுவாமி "சுந்தரமூர்த்தியாரும், சேரமான் பெருமாளும் கைலாயத்துக்குப்போகின்றார்கள். எனனேயும் அழைத்தார்கள்" என்ன, அவர்களுக்கு முன்னே உன்னே, அங்கேவிடுவேன் ; நீ பூசையை வழக்கப்படி முடி என்றார். தன் பூசையைக்கிரமப்படி முடித்தாள். உடனே கணபதி துதிக்கையால் எடுத்துவிடக் கைலாசமலையை அடைந்தாள். பின்பு போன அவ்விருவரும் ஔவையைக்கண்டு, அதிசயப்பட்டார்கள்.

இதுநிற்க, முன்புபோன இருவர்களும், தொண்டைநாட்டில்ஊற்றுக்காடென்னும் ஊரிலுள்ள ஓர் மடத்திற்சென்று கூடினார்

கள். அப்பொழுது உப்பை என்பவள் பிறந்தாள். இந்தக்குழந்தையை யாவர் காப்பாற்றுவார் என்று அதைவிட்டு நீங்கத் தாய் வருந்தும்போது அது சொல்லியது.

உப்பை.

அத்தி முதலெறும்பீ றானவுயி ரத்தனைக்குஞ்
சித்த மகிழ்ந்தளிக்குந் தேசிகன்—முத்தரவே
கற்பித்தான் போனானோ காக்கக் கடனிலையோ
வற்பமோ வன்னாய் யரண.

அதுகேட்டு மனந்துணிந்து போயினள். அவ்வுப்பை முற்பிறப்பில் யாரெனில், பிருகுவின் பத்தினியாகிய நாகவல்லி என்பவள்; திரிமூர்த்திகளும் அவள் அழகின் மிக்கவளென்று கேள்விப்பட்டுப்பார்க்க மாறுவேஷங்கொண்டுபோய் நிர்வாண பிட்சை கேட்டார்கள். அவள் மஹாபதிவிரதையாகையால் இவர்களைப் பாலராக்கி, அப்படியே பால்கொடுத்துத் தன்னைப் பரிசோதித்ததற்குக் கோபங்கொண்டு அவர்களைமூன்றுசனனம் எடுக்கும்படிச்சொன்னாள். "அதுகண்ட திரிமூர்த்திகளுந் தங்களை அவள் மதிக்காமல் பாலராக்கி, மூன்று சனனம் பண்ணும்படிச் சொன்னதற்காகச் சினங்கொண்டு நீ அழகின்றி, மாறுவடிவாகக்கடவை" என்று சபித்துப்போயினர். பின்பு

பிருகுவானவர் இவள் வேற்றுவடிவைக்கண்டு, நீ பூமியில் பிறக்கக்கடவை எனறனர். அவள் கணவனுத்தரவின்படி உப்பை என்பவளாக அவதரித்து வண்ணார் வளர்க்க வளர்ந்து, மாரியம்மையாய் உலகமெல்லாந் தன்னைப்போற்ற இப்பொழுதும் அவ்வூரில் தெய்வமாக இருக்கின்றனள்.

இதுநிற்க; முன்புபோன அவ்விருவருஞ் சோழதேசத்திற் கருவூரிலடைந்து ஒரு சோலையிற்கூட அதிகமான் என்பவர் பிறந்தார். இந்தக்குழந்தையை யாவா காப்பாற்றுவார் என்று அதைவிட்டு நீங்கத் தாய் வருந்தும்போது அது சொல்லியது.

### அதிகமான்.

கருப்பைக்குண் முட்டைக்குங் கல்லினுட் டேரைக்கும்
விருப்புற றமுதளிக்கு மெய்யன்—உருப்பெற்ற
லூட்டி வளர்க்கானோ வோகெடுவா யன்னாய்கேள
வாட்ட முனக்கேனோ மகிழ்.

அதுகேட்டு மனந்துணிந்து போயினள். அந்தக் குழந்தையைச் சேரமான் எடுத்து வளர்க்க வளர்ந்து, வில்வேதம் மனுவிக்கியான முதலிய யாவுங்கற்று, முடிசூட்டப் பெற்று, சொக்கநாதர் திருமுகமெழுதிக் கொடுக்க, பாணபத்திரருக்கு வேண்டிய திரவியங்கள் கொடுத்துப் பொன்வண்ணத்

தந்தாதி என்றோர் பிரபந்தம்பாடிச் சிதம்பரத்தில அரங்கேற்றி அரசுசெலுத்திச் சுந்தரமூர்த்தியார் நட்புப்பெற்றிருந்து அவர் கைலைக்குப்போகும்போது, உடனேபோய் அங்கே தாம் பாடியருளிய ஆதியுலாவை அரங்கேற்றி நமது அனுக்கிரகம் பெற்று, வீற்றிருந்தார்.

முன்புபோன அவ்விருவரும்காவிரிப்பூம் பட்டினத்தடைந்து ஒருமண்டபத்திற்கூடினார்கள். உறுவை என்பவள்பிறந்தாள். இந்தக்குழந்தையை யாவர்காபபாற்றுவாரென்று அதை விட்டுநீங்கத் தாய்வருந்தும்போது அது சொல்லியது.

உறுவை.

சண்டைப்பைபக் குள்ளுயிர்தன் ருயருந்தத் தானருந்தும்
அண்டத் துயிர்பிழைபப தாச்சரியு—மண்டி
அலைகினற வன்று யாறுடைய வுண்மை
நிலைகணடு நீடிருந்த தில்.

அதுகேட்டுத் தாய் மனந்துணிந்துபோயினள். பின்பு அக்குழந்தையைக்கள்விற்போரெடுத்து வளர்க்க, வளர்ந்து தவஞ்செய்து, பத்திரகாளியாய்த் தாருகனைக் கொன்று, திருவாலங்காட்டில் சபாநாயகராய் எழுந்தருளிய நம்முடனேநிருத்தஞ்செய்து,தோற்று அகோரவீரபத்திரரை விவாகம்பண்ணிக்கொண்டு, அவ்விடத்தில் இருந்தாள்.

இதுநிற்க, முன்பு அவ்விடம் விட்டுப் போன இருவரும், திருவாரூரை யடைந்து ஒருமடத்திற்கூடக் கபிலர் என்பவர் பிறந்தார். இந்தக் குழந்தையை யாவர் காப்பாற்றுவார் என்று, அதைவிட்டு நீங்கத் தாய் வருந்தும்போது அது சொல்லியது.

கபிலர்.

கன்றுாழையார் சாட்டிற் கருக்கிற் றவினக்கு
முன்னறும் படிபதிக தாட்மெய்வர்—என்னறு
நயகரும படியளப்பார் நாரியோர் பாகர்
தமக்குத தொழிலெனனே தான.

அதுகேட்டு மனந்தணிந்து போயினள். அக்குழந்தையைத் தமக்குப்பிள்ளையில்லாத பாப்பையனென்னும், ஒரு பிராமணன் எடுத்து வளர்த்து, எழுவயதில் உபநயனம் செய்யத் தொடங்குகையில் பிராமணர்கள் ஒத்துக் கொள்ளமாட்டோம் என்று சொல்ல, அதைக்கண்ட கபிலர் அவர்களைப்பார்த்து,நான்முகத்தோன் என்று ஓர் அகவல் சொல்லிக் கருமத்தினுல் ஜாதியன்றிச் சென்மத்தால் இல்லை என்று சாதிக்க, அதற்குப் பிரதியுத்தரஞ் சொல்லமாட்டாமல் இதுவேவிதி என்று, யாவரும் ஒத்துக்கொண்டு அச்சடங்கு முதலானவை முடித்தார்கள். அக்கபிலர் இன்னும் பாதாளலோகத்

தில் தவம்பண்ணிக்கொண்டிருக்கின்றனர்.

இதுநிற்க, முன்புபோன அவ்விருவரும், வேளின்மலைச்சாரலில் வந்துகூட, அப்பொழுது வள்ளியம்மை பிறந்தனள். இக்குழந்தையை யாவா காப்பாற்றுவார் என்று, அதைவிட்டு நீங்கத் தாய் வருந்தும்போது அது சொல்லியது.

## வள்ளியம்மை.

அன்னை வயிற்றி லருந்தி வளர்த்தவன்று
னின்னுயிரை யாரக்காக் கென்றாயே—முன்னரவஞ்
சூழும் பெருமான குகொட்டி வினைறுவின
யாளும் பெருமா னவனே,

அதுகேட்டு மனந்துணிந்து போயினள். பின்பு அக்குழந்தையை மலைக்குறவர் வளர்த்தார்கள். அவள் முற்பிறப்பில் ஆறெனில் "மஹாவிஷ்ணுவினுல் மோகிக்கப்பட்ட வியுதை என்பவளிடத்தில் பிறந்த குமரி." அவள் குமாரக்கடவுளைக் குறித்துத் தவஞ்செய்தபோது, அவர் வரப்படி தொண்டைமண்டலத்தில் வள்ளிமலையில் இருந்தகடவுளுக்கு நாயகியானுள்.

முன்புபோன அவ்விருவரும், திருமயிலாப்பூரில்இலுப்பைத்தோப்பில் கூடினுர்கள். அப்பொழுது திருவள்ளுவர் பிறந்தனர். இந்தக்குழந்தையை யாவா காபபாற்றுவார்

என்று அதைவிட்டு நீங்கத் தாய் வருந்தும் போது அது சொல்லியது.

### திருவள்ளுவர் வெண்பா.

எவ்வுயிருங் காக்கவொரு ஈசனுண்டோ வில்லையோ
யவ்வுயிரில் யாம்பெறுவ னல்லமோ — வவ்வி
உருகுவது மகாகோடி கலைவதே னன்னே
அருகுவது தானே வரும்.

அதுகண்டு தாய்மனந்துணிந்து அவ்விருவரும் தீர்த்தயாத்திரைக்குப் போயினர். பின்பு சிவாலயத்தின் அருகே உள்ள இலுப்பைமரத்தின்கீழிருந்த குழந்தை அவ்விலுப்பைமலரிற் றுளிக்குந் தேனை உண்டு, பூர்வம்பிரம்மாஆதலால், சிகை எக்யோபவீதம் சதுர்வேத புஸ்தகமுங்கொண்டு வளர்ந்து வருகையில் கங்காகுல சிரேஷ்டனாகிய ஒரு வேளாளன் மனைவி, புத்திரபாக்கியத்தைக் குறித்து நெடுநாள் அச்சிவாலயத்தில், தவஞ்செய்திருந்தாள். அப்பொழுது நாம்அவளுடைய தவத்திற்கிரங்கி, இந்தக்குழந்தையை நீ எடுத்துக்கொள் என்று, அருள்செய்து திருவள்ளுவர் என்று நாமகரணமுஞ்செய் என்று ஆஞ்ஞாபித்தோம். அவளும் அந்தக்குழந்தையை எடுத்து மகிழ்ச்சியடைந்துகொண்டுபோய்த் தன்புருஷன்கையிற் கொடுத்தாள். அவனும் அக்குழந்தையை

இருகைகயேந்தி வாங்கித் தன்மடியி லிருத்தி, உச்சிமோந்து, கொஞ்சி, விளையாடி, பேரானந்தம்பெற்று, அதுவந்த வரலாறு கேட்டு இருவரும் அந்தப்பிள்ளையை நாளொருமேனி பொழுதொரு வண்ணமாய் வளர்த்துவருங் காலத்தில், அவர்கள் சுற்றத்தார்கள் ஏதோ ஒரு பிள்ளையைவளர்க்கிறார்கள் என்று, இவர்களை இகழ்ச்சிசெய்ய, அதற்கு அவர்கள் அஞ்சிப்புறத்திலுள்ள ஓர் தொழுவத்திலே தொட்டிலிட்டு, அதில் அக்குழந்தையைக் கிடத்திப் பண்ணைக்காரனைக் காவல்வைத்து, வளர்த்தார்கள். பின்பு திருவள்ளுவரும் ஐந்துவயதானகாலத்துத் தன்பொருட்டுத் தாயும் தகப்பனும் சுற்றத்தார்களால், நிந்தைசெய்யப்படுகிறார்கள் என்று அவர்களைப்பார்த்து, என்னால் உங்களுக்கு வருத்தம் வேண்டுவதில்லை; இனி நான்வேறிடத்தி லிருக்கின்றேன்; நீங்கள் வருந்தாதிருங்கள் என்று சொல்ல, அவர்கள் அப்பா! மகனே! உன்னைப் பிள்ளைக்கலி தீர்க்கவந்த பெருமான் என்று எண்ணியிருந்தோமே! நீ இப்படிச் சொல்லலாமா! உன்னை அரைக்கணம் பிரிந்து உயிர்தரித்திருப்போமா? என்று கூற நாயனார் "நீங்கள் என்னை நினைக்கும்போ

து வந்து உங்களுக்கு வேண்டியதைச்செ ய்வேன்; நீங்கள் ஒன்றுக்கும் அஞ்சவேண் டியதில்லை" என்று சொல்லிப் புறப்பட்டு, அவ்வூருக்கு அருகேஒரு பனைமரத்தின் நிழ லிலே இருந்தார். அப்பனைமரத்தடி நீழல் அவரைவிட்டு நீங்காதிருக்க அதைக்கண்ட வானவ ரெல்லாம இப்பிள்ளை தேவனோ? முனிவனோ ? கடவுளோ ? இவ்வுருவோடு வந்த தென்று துதிக்க, அவர்களைப் பார்த்து நாயனார்"இங்கே தவமேது? மகிமையேது? யாதொன்றும் என்னிடத்தில்இல்லைபோ!" என்று தாம் அவ்விடத்தைவிட்டு, நீங்கித் திருமூலர்,போகர் முதலாகிய சித்தர்களும், மாதவர்களும் வாசஞ்செய்கின்ற மலைக்கு எழுந்தருளித் தவஞ்செய்வார்களோடு கூடி யிருந்தார். அங்கிருந்த திருமூலர் நாயனு ரைக்கண்டு, வள்ளுவரே ! பூர்வத்தில் நந்தி எனக்கு அனுக்கிரகம் பண்ணும்போது, அங்கே இருந்தீரே; உலகத்தாருக்குச் சித் திமுத்தி அருளும்படிக்கும், அறம்பொருள் இன்பமென்னு முப்பாலையுந் தமிழில் அரு ளிச்செய்யும்படிக்கும், இங்குவந்து அவத ரித்தீரோ! என்று துதிக்க, நாயனாரும் மகி ழ்ந்து அங்கே தவஞ்செய்வோரில், ஒருவ ராகித் தாமும் இருந்தார்.

அக்காலத்தில் தொண்டைமண்டலத்தில் ஒரு வேதாளமானது பயிர்களை அழித்தும், உயிர்களைவதைத்தும் அநேகதுன்பஞ் செய்துவந்தது. அப்பொழுதுகாவேரிப்பாக்கம் என்னும் ஓர் ஊரில், ஆயிரம் ஏர்கொண்டு உழுது பயிர்செய்கின்ற "மார்க்கசகாயன்" என்னும் ஒரு வேளாளன் இந்த வேதாளத்தை அடக்கினவருக்கு அளவற்ற திரவியமும் ஓர் ஊரும் வேண்டியவைகளையுந் தருகிறேன் என்று பிரசித்தம் பண்ணியிருந்தான். அது ஒருவராலும் ஆகாமலிருந்தது. பின்பு அவ்வேளாளன் பெரியோர்கள் வாசஞ்செய்யாநின்ற மலையில்வந்து திருமூலர் முதலானவர்களுடன் சொல்ல, அவர்கள் அதோஇருக்கும் திருவள்ளுவரோடு சொல்லென்றார்கள். அவ்வாறே அவ்வேளாளன் நாயனாரை வணங்கிச்சொல்ல அப்போது ஜீவகாருணியராகிய நாயனார் அவ்வேளாளன் வேண்டிக் கொள்வதற்கிணங்கி பசு பொருட்டு,அவ்வேதாளத்தைதவிபூதிபஞ்சாட்சரத்தால் வென்று, யாவரையும் ரக்ஷித்தார். அதுகண்டு அவ்வேளாளன் முன்னர் பிரசித்தப்படுத்திய படி ஓர்ஊரும், அளவற்றதிரவியமும் கொடுத்ததுமன்றி, நாயனார் யோக்கியத்தையும் மகத்துவத்தையும்பார்

த்து வாசுகியென்னும் தன்பெண்ணையும் கொடுக்குமபடி நிச்சயித்து நாயனாரிடத்துவ ந்து சுவாமீ! என்பெண்ணைத் தேவரீர் விவா கஞ்செய்துகொள்ளவேண்டுமென்றுசொன் னான். நாயனார் உலகத்தாருக்கு இல்லறம் நட த்திக்காட்டவேண்டுங் காரணத்தை யோசி த்து, "அந்தப்பெண் நான்கொடுக்கும்மணலை அன்னமாக்கி, எனக்குப் படைக்குமானால் விவாகஞ் செய்துகொள்ளுவேன்" என்றார். அந்தப்பெண் அப்படியே சம்மதித்து நாய னார் கொடுத்தமணலைச் சமைத்துப் படைத் தனள். பின்பு நாயனாரும் அங்கீகரித்து, விதிப்படி வாசுகியை விவாகஞ்செய்து, சில நாள் அங்கிருந்து பின்பு மனைவியுடன் மயி லையில்வந்து, ஓர் இல்லாக்கிக்கொண்டு, இல் லறஞ்செய்து நெய்தற்றொழில் பாபமில் லாததென்று தீர்மானித்து, அவ்வூரிலிருக் கும் ஏலேலசிங்கன் என்னும் பெரியவர்த்த கனிடத்தில் நூல்வாங்கி, ஆடை நெய்து அக்கூலியால் சீவனஞ்செய்து காலங்கழித் திருந்தனர். அக்காலத்தில் திருவாலங்காட் டி[illegible] சபாநாயகராக எழுந்தருளியிருக்கும் [illegible]ம மகிடாசுரசங்காரஞ்செய்து கெர்வித் திருந்த பத்திரகாளியுடன் பலவித நடனஞ் செய்து அவளைக்கெர்வபங்கப்படுத்[illegible] அ[illegible]ரு

ஞ் சோர்வடையாமல் ஆடிவந்தாள். நாம் அப்போதுகுண்டலங்கழன்றதைககாதிலே தானே சேரும்படி ஊர்த்துவபாதமாகநடனஞ்செய்தோம். அவளும் அப்படியாடநாணித்தோற்றாள். அதுகண்ட தேவர்கள் சந்தேகமுற்றுத் தற்செயலாய் ஊர்த்துவத் தாண்டவம் பண்ணினது என்னகாரணமோ? தெரியவில்லை என்றுமயங்கிநிற்க, நீங்கள் திருமயிலையில் இருக்குந் திருவள்ளுவனைக்கேட்டீர்களானால் அதுசங்கதி தெரியுமென்றுசொல்ல, தேவர்கள் அங்கேபோய் அவர்கள் முன்னிலையில் நிற்க, அவர் குறிப்பறிந்து சொல்லியது.

வெண்பா.

பூவிலயனும் புரந்தரனும் பூவுலகைத்
தாவியளந்தோனுந் தாமிருக்க—நாவி
விழைகத்தி னூனொருவு மேழையதி வேறே
குழைக்கும் பிஞ்ஞகன்றன் கண்.

என்னும் வாக்கியத்தைக்கேட்டுத் தங்கள்சந்தேகந்தெளிந்துபோனார்கள்.

ஒருநாள்நாயனார்நூல்வாங்கும்பொருட்டு ஏலேலசிங்கன் வீட்டுக்குப்போய்ச் செட்டியார்எங்கே! என்றுகேட்க, அவர் சிவபூசை செய்கிறார் என்றார்கள். அவர் சிவபூசை இங்குசெய்கிறாரோ ! குப்பத்திற்செய்கிறா

ரோ! வென்ன, அதற்கு அவர் பத்தினியார் உள்ளேபோய் அவருக்குச்சொல்ல, செட்டியார்கேட்டுச் சிவபூசையைவிட்டுத் திடுக்கிட்டோடிவந்து, நாயனாருடைய உபய பாதங்களை வணங்கி, சுவாமீ! அடியேனைப் பந்தசாகரத்தினின்று மெடுத்துக் கரையேற்ற வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தனர்; நாயனார் அவரது பக்குவத்தையும் மற்றுஞ் சில மாணாக்கர் பக்குவத்தையும் சோதிக்கவெண்ணி, ஒருநாள் அவர்களை அழைத்துக் கொண்டு, ஒருவனத்திற்சென்று அங்குவெள்ளம்பெருகிவரச் செய்தனர். அவர்கள்பயந்து மனோதிடமின்றி இக்கரையிலிருந்து உடன் போகமாட்டாமல் விழிக்க, ஏலேலசிங்கர்மாத்திரம் தம்மைத் தொடர்ந்துவர, அவ்வெள்ளம் வழிவிட்டது. பின்பு நாயனார் ஏலேலசிங்கரைப் பார்த்து ஓர் உயர்ந்த மரத்தினுனியில் ஏறென்று சொல்ல,அவர் ஏறியபின் பிடித்தகொம்பையும்,நின்றகொம்பையும் விட்டுவிடென்றருள, அவ்வாறு யோசியாமல் விட்டனர் விட்டும் ஒரு அபாயமுமில்லாதிருக்கக்கண்டு, நாயனார் ஏலேலசிங்கரைத் தமது மடியின்மேல்வைத்து ஞானோபதேசம்பண்ணினார். பின்பு தம்மிடத்துக்கு வந்துவிட்

டார்கள். அப்படியிருக்குநாளில், அந்தநாட்டுக்கு அரசனாகிய அச்சுதராஜன் ஒருநாள் ஏலேலசிங்கரோடு பேசிக்கொண்டிருக்கும்போது உமக்குப் புத்திரப்பேறில்லையே! உம்முடைய ஞானாசிரியனைக் கேட்கலாகாதா? என்ன, அவர் நல்லதென்றுபோய் மற்றொருநாள் நாயனாரைக்கண்டு விண்ணப்பஞ் செய்ய, நாயனார் சுவாமி கடாக்ஷிப்பார் என்று அனுக்கிரகம் பண்ணினார்.

பின்பு ஒருநாள் ஏலேலசிங்கரும் அவர் மனைவியும் வழக்கப்படிக் காலையில் தரிசிக்கும் பசுவின் வாற்புறத்தில் நாம்சிறுகுழவியாய் இருந்து அழுவதைக்கண்டு, அவர்கள் அக்குழந்தையை எடுத்து உச்சிமோந்து முத்தமிட்டு ஆனந்தவாரிதியி லழுந்தினார்கள். உடனே அந்த அம்மாள் ஸ்தனங்களிலேபால்சுரந்து பெருக இக்குழந்தைக்குப் பால்கொடுத்து ஞானகுருவாகிய நாயனார் சந்நிதானத்திற் கொண்டுபோனார்கள். அவர் அக்குழந்தைக்கு அழகாநந்தனென நாமகரணம் செய்து அனுப்பினார். உடனே ஏலேலசிங்கர் அச்சுதராஜனென்னும் மகாராசனிடத்திற்சென்று, எனக்குத் தெய்வீகத்தினால் குழந்தை உண்டாயிற்று என்று சொல்ல, அவன் அப்படித்தெய்வீகமானால்

என்னிடத்திலும் அதுவரலாமே என்றான். அவ்விருவரும் இப்படிப்பேசிக்கொண்டிருக்கும்போது அக்குழந்தை அரசனது மடியில்வந்திருந்தது.

அதை அவன்கண்டு இது அழகானந்த மோவென்று ஆனந்தமடைந்து, அனைத்துக் கொண்டு தன்மனைவிகையிற்கொடுக்க, அவள் வாங்கினவுடனே ஸ்தனங்களினின்று பால்பெருக, அதனைக்குழந்தைக்குப் புகட்டினாள். இப்படி அற்புதமாய் அக்குழந்தை வளர்ந்துவந்தது. பின்பு நாயனார் அனேகருக்குஞானோபதேசஞ்செய்து மகிமையோடு இருந்தனர். மறறொருதினத்தில் ஏலேலசிங்கரது கப்பல் கரைதட்டிப்போக அதைக்கேள்விப்பட்டு, அவர்தம்மரசனுடனே சொல்ல, அவன் நம்மாலாவதென்ன இருக்கிறது. உம்முடைய ஆசாரியருடனேசொல்லுமென்ன, அவர்போய் விண்ணப்பம் பண்ணிக்கொள்வதற்கு முன்னமே நாயனாரறிந்து ஏலேலசிங்கரை அழைப்பித்துக் கூட்டிக்கொண்டுபோய்க் கப்பலிற் கயிறு பூட்டி, அனேகம் படவுகாரர் இழுத்திழுத்து, எவ்வளவும் அசையாமற் பதிந்திருப்பதனால் அவர்களெல்லாஞ் சோர்ந்து கிடப்பதைக்கண்டு, நாயனார் அதனருகிற்சென்

று தமது திருக்கையாற்றொட்டு "ஏலேயா என்று இழுங்கள்" என்று கட்டளையிட, அப்படியே இழுத்தார்கள். உடனே நிற்க வேண்டியபடி கப்பல் சரியாக நின்றது.

பின்பு ஒருகாலம் மழையில்லாமையால் உலகத்தில் தானியங்கொள்ளக் கிடையாமல் அனேகர் இறந்து போவதைக் கண்டு, ஜீவகாருண்ணியராகிய நாயனார் தமக்கு அன்புள்ளமாணாக்கனாகிய ஏலேலசிங்கனைப் பார்த்து, நீர் இந்தப்பஞ்சகாலம் மாறுகிறவரைக்கும் வாங்கிக் கட்டிவைத்திருக்கும்நெல்லையெல்லாம் வாங்கினவிலைக்குக் குறுணி யேற்றமாக விற்கக்கடவையென்றருள; அவ்வாறே குருமொழிதவறாது விற்றனர். பொருள், மலைபோலுங் குவிந்தன. அவர் கட்டிவைத்திருந்த நெல் ஏழுவருஷங்குறைந்ததில்லை. பின்பு மழைபெய்து உலகம் க்ஷேமமடைந்தது. மறுபடியும் நாயனார் ஏலேலசிங்கனைநோக்கிக்குறுணிகுறையவில்லென்றார். அப்படியே விற்றார். அவரிடத்தில் இருந்தநெல்லெல்லாம் மறுநாள் அஸ்தமயனத்துக்குள்ளே செலவாய்ப்போய்விட்டன. பின்பு நாயனார் நீர் நெல்லுவிற்று விர்த்தியான பொருளையெல்லாம் உருக்கித்திரட்டிக் கடலிற்போட்டுவிடுமென்ன,

அவர் அப்படியே செய்தார். அதை ஒரு பெருமீன் விழுங்கிற்று. சிலநாள்சென்ற பின் அம்மீன் வலைக்காரர்கையில் அகப்பட்டது. அதனை அவர்கள் சேதிக்கும்போது, அதன்வயிற்றில் மலினமும் பாசியும் படிந்ததொரு ஸ்தம்பமிருக்கக்கண்டு அதனை ஏலேலசிங்கருக்குக் கொடுத்தார்கள். அவர் கருங்கல்லென்றெண்ணி ஸ்நானம் பண்ணுமிடத்திற் போட்டுவித்தார். அதன்மேல் நடத்தன்முதலிய பயிற்சியால் மலினம் நீங்கிப் பிரகாசித்தது. அதில் தமது பேர் வெட்டியிருத்தலால் தம்பொருளென்றறிந்து, இது குருவருளென்று அற்புதமடைந்தார். இப்படி நாயனார்அநேகஅற்புதங்களைச்செய்துகொண்டிருக்குநாளிலே பாண்டிநாட்டிலே மதுரையிலே நக்கீரர்முதலிய சங்கப்புலவர்கள் தாம் அடைந்திருந்த கல்விப்பெருக்கால் கர்வமடைந்து, அங்குபோந்த வித்வசிரோ[illegible]ணிகளையெல்லாம் அவமதித்துநடப்பதைக் கேள்வியுற்றிருந்த அழகானந்தர்முதலிய சில பெரியோர்கள் திருவள்ளுவரைப் பார்த்துக் கற்றற்கெளிதாய் இம்மையாதி மும்மைக்குமுதவியாய் லோகோபகாரமாய் உமது பெயரால் ஒரு நூல் செய்யவேண்டுமென்றுவேண்ட, நா

யனார் வேதாகமஸாரங்களைத்திரட்டி அறம் பொருள் இன்பமென முப்பாலாக்கி, 1330 குறள் வெண்பாவாற் பாடியருளினார். பின்பு அழகானந்தர் முதலாயினோர் அந்நூலைக் கண்டு சந்தோஷித்து இதைக்கொண்டு சங்கத்தாரைச் செயிக்கலாம் என்று துணிந்து, நாயனாருக்குத் தங்கள் எண்ணத்தைத் தெரிவித்தனர். நாயனார் தமது மனைவியை இல்லின்கணிறுத்தித் தாம் வழிக்கொடு நடந்து, இடைக்காடர் வசிக்கிற இடைக்கழி நாட்டை அணுகிச்சேர்கையில், ஔவை நேர்பட, அவளோடும் இடைக்காடனைக் கண்டு தாஞ்செல்லும் காரணத்தைத்தெரிவிக்க, இடைக்காடரும் நாயனாரைநோக்கி "இடையாலுங் கடையாலு மழியக்கடவதென்று ஸ்வாமி தம்மை நிராகரித்த நக்கீராதி சங்கத்தாரைச் சபித்திருக்கிறார்." ஆதலால் என்னாலு மும்மாலு மச்சங்கம் அழிவுபடப் போகிறதாகையால் நாமும் உம்முடன் வருகிறோம் வாருமென்று இடைக்காடரும் ஔவையுங் கூடவரப்பெற்று மதுரையையடைந்து வையையாற்றில் ஸ்நானஞ்செய்து நித்தியநைமித்தியகருமங்களை முடித்துக்கொண்டு ஆலயத்தைப் பிரதட்சணம்பண்ணி, அங்கு மீனாக்ஷி சொ

க்கலிங்க மூர்த்தமாய் வீற்றிருக்கும் நம்மை த் தரிசனஞ்செய்தனர். பின்பு ஷை சங்கி தானத்தில்பாண்டிய ராஜா மந்திரி பிரதா னிகள் மற்றச்சனங்கள்ஔவை இடைக்கா டர் முதலான பெரியோர்க ளிருந்து கே ட்கும்படித் தாமருளிச்செய்த திருக்குறள் முப்பாலையும் சங்கத்தார்நெஞ்சிற் றிகிலே றவும், வினையர்நெஞ்சிற் களிப்பேறவும், திருவள்ளுவர் அரங்கேற்றி முடித்தனர். அதனைச் செவியாரக்கேட்ட இராஜன் முதலியோர் யாவரும் மிகுந்த ஆநந்தபர வசராய் நாயனாரைப்புகழ்ந்து துதித்தனர்.

பின்பு நாயனார் இடைக்காடரும் ஔ வையும் மற்றவர்களுஞ்சூழ்ந்துவரப் பொற் றாமரைத் தீர்த்தத்தின்கண்ணுள்ள சங்கப் பலகையின்கண் தமிழ்க்கரசராக வீற்றிருக் கின்றவர்களும் தவத்திலும் ஞானத்திலுஞ் செந்தமிழ்வாக்கிலும் அமைந்த பெரியோ ராகிய திருவாதவூரரென்னும் மாணிக்கவா சக சுவாமிகள் அருளிச்செய்த திருக்கோ வையார் நானூற்றுக்கும் நூறுகுற்றங் கூறி னவர்களும், நமதன்பனுகிய தருமியென் னும் ஏழைப்பிராமணனுக்குப் பொற்கிழி கொடுத்தற்பொருட்டு அருளிச்செய்த,

அகவல்.

கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின்
மயிலியற் செறிஎயிற் றரிவை கூந்தலி
னறியவுமுளவோநீயறியும்பூவே.

என்னும் திருமுகப்பாசுரத்திற்குக் குற்றங் கூறினதினால், நாம் ஓர் வித்வானாய் அச்சங்கத்திற்கேகி நக்கீரனைப்பார்த்து,

வெண்பா.

அங்கங் குலையவரிவாளி னெய்பூசிப்
பங்கம் படவிரண்டு கால்பரப்பிச் - சங்கதனைக்
கீர்கீ ரெனவறுக்குங் கீரனோ வென்கவியை
யாராயு முள்ளத் தவன்.

என்று கேட்டபோது நக்கீரன் நம்மை அறிந்துகொண்டு

வெண்பா.

சங்கறுப்ப தெங்கள்குலஞ் சங்கரனார்க்கேதுகுலம்
பங்கமுறச் சொன்னால் பழுதாமே - சங்கை
யரிந்துண்டு வாழ்வோ மரனே ரின்போல
விரந்துண்டு வாழ்வ திலை.

என்று சொல்ல, நாம் நமது நெற்றிக்கண் ணைக்காட்ட' அப்போதும் அஞ்சாமலும் உம்மைப்போல எத்தனை மந்திரவித்தைக் காரர்களை நாங்களறிவோம்; நீர் இப்போது

காட்டிய நெற்றிக்கண்ணேயன்றி உடம்பெல்லாம் கண்ணைக்காட்டினும்நீர்பாடிய பாட்டில் குற்றங் குற்றமே என்று கூறினவர்களும் மற்றப் புலவர்கள் பாடிய பாடலை யெல்லாங் கொள்ளையிட்டு, அகஸ்தியரையும் வெற்றிகொள்ளத்தக்க விலக்கண விலக்கிய வாராய்ச்சி யுள்ளவர்களுமாகிய நக்கீரராதிப்புலவர்களுடைய தைரியமும் தருக்கும் புத்தியுங் கலங்கிச் சோரவுடையும்படி ஆட்டுக்கூட்டததில் புலிபுகுந்தாற்போலவும், அராக்கூட்டத்தில் கருடனடைந்தாற்போலவும், யானைக்கூட்டத்தில் சிங்கமேறு சென்றாற்போலவும், மூங்கில் வனத்திற் றீப்பறறியதுபோலவும், அவர்களிடத்திற்சென்று அவாகள் தம்மை வினவின அசதி வினுக்களுக் கெல்லாஞ் செந்தமிழ்ப்பாவாலுத்தரங்கொடுத்தார்.

பின்பு சங்கத்தார் நாயனாரைநோக்கி, வள்ளுவரே! நீர் எந்தவூர்? என்று கேட்க, அதற்கவர்,

வெண்பா.

எந்தவூ ரெனநீ ரிருந்தவூர் நீர்கேளீ
ரந்தவூர்ச் செய்தி யறிகிலீரோ — வந்தவூர்
முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமா
யப்பாழும் பாழா யறு

என்பதுமுதலிய ஞானார்த்தமாகிய செய்யு ட்களால் விடைகூறினார்! பின்பு சங்கத் தாரைநோக்கி நமது மூதாட்டியாகிய ஔ வை கைச்சைகையா இவையென்னவெ ன்றுகேட்க, அவர்கள்,

வெண்பா.

இவ்வளவு கண்ணிரு ளிவ்வளவு சிற்றிடையா
ளிவ்வளவு போன்ற விளமுலையா - ளிவ்வளவாய்ங்
காமத் தலைவிவைபுக சாளுது கனதிரு
னாமத்தை காட்டுகுறி நன்று.

என்று விடைகூற, இஃது தகுதியான உத் திரவன்றென்று அக்குறிகளுக்கு ஔவை சொல்லியது.

வெண்பா.

ஐய மிமெி னறநெறியைக் கைப்பிடிமி
னிக்கனவே யும்மனத்தை யிட்டெண்மின் - றெய்வ
மொருவனே யென்ன வுணரவல் லீரே
லருவினை நீங்கு மறும்.

என்று மொழிந்ததைக்கேட்டு சங்கத்தார் திகிலடைந்து இவரை வெல்லப்படாதென் று துணிந்து, இடைக்காடருடனே பேச அவர்,

வெண்பா.

ஆற்றங் கரையி னருகிருந்த மாமரத்திற்
காக்கை யிருந்து கஃகஃகெனக் - காக்கைதனை
யெய்யக்கோ லில்லாம லிச்சிச்சென வெய்தான்
வையக்கோ னார்தன் மகன்.

என்றுகூறிய இதுபோன்ற செய்யுட்களுக்கு உத்திரம்கொடுக்கச் சக்தியின்றி இவர்களைவெல்வ தரிதென்றறிந்து நாணமுற்றுச் சங்கப்புலவர்கள் நாயனாரைநோக்கி, "நீர்பாடிய குறளை நாங்க ளொப்புக்கொள்ளுவதற்கு ஐயமொன் றுளது. அஃதியாதெனின், நாங்களிருக்கு மிந்தப் பலகைதெள்ளிய செந்தமிழ் நூலைக்கண்டாலிடங்கொடுக்குமாதலால் அது ஒப்புக்கொள்ளுமாகில் எங்களுக்கெல்லாஞ் சம்மதி" யென்றுசொல்ல, அவ்வாறே நாயனார் தம்மால் அருளிச்செய்யப்பட்ட திருக்குறள் முறையை அச்சங்கப்பலகைமீது வைத்தார். உடனே அப்பலகை தன்னிடத்திருந்த சங்கத்தார் யாவரும் பொற்றாமரையில்விழும்படி தெய்வத்தன்மை பொருந்தியதிருக்குறட் புத்தகத்தி னளவாய்ச்சுருங்கி அதற்குமாத்திரமிடங்கொடுக்கக் கண்டவர்கள் யாவருங் களிகூர்ந்தனர். அவருட்சிலர் இது தெய்வீகமாகிய வேதமென்றுஞ் சிலர் வேதாங்கங்களென்றுஞ் சிலர் ஞானநூலென்றுஞ்சிலர் ஆகமமென்றுஞ் சிலபுராணங்களென்றுஞ் சிலர் வாலிபர் மதனுகமமென்றுந் தத்தமக்குக்கோன்றியவாறே பலவாறாகச்சொல் வெழுதுவதனர். அன்றியும் அநேகவிதே

ஷமான பலநூல்களும், சாஸ்திரங்களும், இத்திருக்குறளினது பாயிரத்திற்கோர்பாடலின் பொருளுக்குமொவ்வாதென்றும், இதுவே வித்வான்களுடைய பாக்கியமென்றும், இந்தப்பயன் அநேகமாயிரம் அகஸ்தியர்கள் ஒருருவாகிவந்து பாடப்பட்டதோவென்றும், பலவிலக்கண விலக்கியங்கட்கும் இஃது அங்கத்தையொக்குமென்றும், விஷ்ணுவானவ ரிவ்வுலகை இரண்டடியாலளந்தார். இது எல்லாருள்ளத்தையு மீரடியாலளந்ததென்றும், இது சட்சமயத்துக்கும் பொதுநூலென்றும், உட்சமயத்துக்கேயுரியநூலென்றும், கல்விமான்களும் அரசர்களும் மற்றவரும் கொண்டாடித் துதிக்கும்போது பொற்றாமரையில் விழுந்து தமோறித் தத்தளித்து வருந்தி நிற்கும் சங்கப்புலவர்கள் நாற்பத்தொன்பதின்மரும் மிகக் கலங்கிக் கரையேறி நாயனாரையும் திருக்குறளையும் புகழ்ந்து துதித்து நாற்பத்தொன்பதின்மரும் நாற்பத்தொன்பது வெண்பா அருளிச்செய்தனர். அஃது <u>திருவள்ளுவமாலை</u>யெனப் பெயர்பெறும்.

ஷை சங்கத்தாரும் உக்கிரப் பெருவழுதி யென்னும் பாண்டியன் முதலானவர்களும் நாயனாரைத்துதித்து அத்தியந்தம் ஆனந்த மடைந்து வெகுபூசிதம்பண்ணி இந்நூலை அகஸ்தியரும் ஒப்புக்கொளின் மிகநல்ல தென்ன, அதற்குநாயனார்சம்மதித்துவிடை பெற்றுப் பொதியமலைக்குப்போய் அகஸ்தியர் முதலிய முநிவர்களைக்கண்டு தாஞ்செய்த நூலைக்காண்பிக்க, அவர்கள் அதை நன்குணர்ந்து அடைந்த சந்தோஷத்தையும் புகழ்ந்தபாடலையும் அனந்தனாலுஞ் சொல்லமுடியாது. அவ்விடத்தில் தொருங்கணத்தார் தம்மை வழிபட அவருக் கனுக்கிரகித்து நாயனார் அவர்களிடத்தில் உத்தரவு பெற்றுத் தாம் முன்பு போம்போது வழியில் நேர்படாத ஸ்தலங்களையெல்லாந்தரிசனம்பண்ணிக்கொண்டு திருமயிலைக்குச் சமீபமாக வருவதை அப்பதியாரும் ஏலேலசிங்கரும் கேள்விப்பட்டு எதிர்கொண்டு போய் அழைத்துவந்தார்கள். அவரும்வந்து தமதில்லத்தில் வாசுகிமாதிேனாடு மிருந்து இல்லறம் நடாத்திவந்தார்.

இப்படி இருக்கையில் ஒருபெரியவர்அவரிடத்திற்சென்று சுவாமீ! இல்லறம் பெரிதோ? துறவறம் பெரிதோ? அடியேனுக்

கு அனுக்கிரகிக்க வேண்டுமென்று பலநாள் பணிசெய்து காத்திருக்க, நாயனார் அவருக்கு உத்தரமொன்றுஞ் சொல்லாமல் அவரே அறிந்துபோம்படி ஒருநாள் தமது வாசுகி யென்னும் மனையாள் கிணற்றில் ஜலந்தூக்கிக்கொண்டிருக்கையில் அழைக்க, அந்தம்மாள் பாதிகிணற்றளவில் தூக்கினகுடத்தை அப்படியே நிற்கவிட்டு வந்ததையும், மற்றொருநாள் அந்தம்மாள் நாயனருக்குப் பழையது பரிமாறி நிற்கையில், நாயனர் எனக்கு இச்சாதஞ் சுடுகின்றதென, அந்தம்[illegible]ம் விசிறிகொண்டு விசிறியதையும், மற்றொருநாள்நல்ல மத்தியானத்தில் சிறிதிருளனுகாலிடத்தில் தாம் செய்யும் போது கையிலிருந்த குழல் தவறி வீழ்ந்ததையெடுக்க மனையாளைநோக்கித் தீபங்கொண்டுவாவெனக் கொண்டுவந்ததையும், வந்திருந்தவர்கள் கண்டு, இப்படிப்பட்ட மனையாள்வாக்கில் இல்லறமே பெரிதென்றும், இல்லையேல் துறவறமே பெரிதென்று மெண்ணிக்கொண்டு ஒன்றுங்கேளாமற்போய் விட்டார்.

இப்படி நாயனருந் தம்மனைவியும் அருமையாக இல்லறநடாத்திவருங் [illegible]த்தில் வாசுகியம்மாள் மோட்சமடையும்போது

நாயனார் திருமு[illegible]தப்பார்க்க, நாயனாரும என்னென்றார். என்னை மணஞ்செய்தவன்று தொடங்கித் தேவரீருக்கு அன்னம் பரிமாறும்போது ஒரு சிறு பாத்திரத்திற் சலமும் ஊசியும் வையெனக்கட்டளையிட்டது இன்னகாரணமென இன்றுவரையில் அடியேற்குத்தெரியவில்லை யென்று விண்ணப்பஞ்செய்ய, நாயனார் அன்னம் புறத்திற் சிதறில் எடுத்துப் பரிசுத்தஞ்செய்வதற் கென்றுசொல்ல அதைக்கேட்டுஉடனே மோட்சமடைந்தனள்.

அப்போது நாயனார்பாடிய

வெண்பா.

அடிசிற்றினியதே யானபுடையாளே
படிசொற்றவறாத பாவா - யடிவருடிப்
பின்றூங்கி முன்னெழுந்த பேதையே போதியோ
வென்றூங்கு மெனகணிரா.

என்றுரைத்து அந்தம்மாள் திருமேனியைச் சமாதிபண்ணினார். பின்பு அவர் மகா அற்புதங்களைச்செய்துகொண்டிருந்துவலே லசிங்கரைப்பார்த்து நமக்குப் பரிபூரண திசை நேரிட்டிருப்பதால் நமது சரீரத்தை வீண் டம்பமின்றி புரிகட்டித்தெருத்தெருவாய் இழுத்துக் கடைசியில் ஊர்ப்புறத்தில் ஈசானியதிசையில் போட்டுவிடே

ன்று கட்டளையிட்டு [redacted]டைகூடிப் பரிபூரணமானவர்போல் இருக்கக்கண்டு, ஏலேலசிங்கர், பொற்பெட்டியில் வைத்து அடக்கஞ்செய்ய எத்தனித்ததை. அறிந்து நாயனார் கண்விழித்துப்பார்த்து "அப்பா! நான்சொன்ன சொல்லைக் கடவாதே"யென்று சொல்லி, உடனே விதேகமுத்தியடைந்தனர்.

ஏலேலசிங்கர் நாயனார் கட்டளையைச் சிரமேற்றாங்கி அவர்சொல்லிய வண்ணம் நாயனாரைப் புரிகட்டியிழுத்துத்தெருத்தெருவாய்ச்சுற்றிப் பின்னர் ஈசானியமூலையில் எறிந்துவிட்டனர்.

அவரது சரீரப்பரிசமடைந்த ஜெந்துக்களெல்லாம் பொன்னிறமடைந்து சுவர்க்கமபெற்றன என்று உமாதேவியாருக்கு பரமகிருபாநிதியாகிய பரமேஸ்வரர் திருவாய்மலர்ந்தருளினார்.

திருவள்ளுவநாயனார்

திவ்விய சரித்திரம்

முற்றிற்று.